21st January 1961]

*Teaching of Geology, etc., in Colleges*

* 54 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் எந்தெந்த கல்லூரிகளில் பூகர்ப்ப இயல், கனி இயல், அணுசக்தி இயல் போதிக்கப்படுகின்றன ?

(இ) இல்லையானால், மேற்கண்ட பாடங்களைப் போதிக்க அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) A statement [a] is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : மைனிங் இன்ஜினியரிங்-க்கு மாணவர்கள் வராத காரணத்தால் அது கைவிடப்பட்டதாக அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. நம் மாநிலத்தில் மைனிங் வேலைக்கு வாய்ப்பு இல்லை என்ற காரணத்தால் இதுவரை ஒருக்கால் இருக்கலாம். இப்பொழுது நெய்வேலி மைனிங் போன்ற வேலைகள் நம் மாநிலத்திலேயே இருக்கிற காரணத்தால் அந்த என்ஜினியரிங் பட்டப்படிப்பை அனுமதிப்பதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : போதிய மாணவர்கள் வந்தால் கட்டாயம் யோசிக்கும்.

SRI A. VEDARATHNAM : ஆட்டாமிக் என்ஜினியரிங் எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் இப்பொழுது போதிக்கப் படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அணுசக்தியைப் பொறுத்த படிப்பு பி.எஸ்ஸி., எம்.எஸ்ஸி.-யில் சொல்லிக்கொடுக்கப் படுகிறது. பிஸிக்ஸ்-டன் சேர்க்கப்பட்டிருக்கிறது. தனியாக என்ஜினியரிங் இல்லை.

SRI R. SRINIVASA IYER : How many students in the State have studied the mining course, as stated in paragraph 2 of this answer? How many graduates in mining of the Madras University are there? How many of them have been provided with employment in this State?

THE HON. SRI C. SUBRAMANIAM : My answer is that the mining course was started in the College of Engineering, Guindy, in 1960–61. That has been stopped. Therefore no question of "how many students graduated in that course" arises. I do not have the figures with regard to number of persons employed or employment prospect.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், மைனிங் என்சினியரிங் கற்றுக் கொடுப்பதற்கு சுமார் 50 லட்சம் ரூபாய் அளவில் கருவிகளை வாங்கி வைத்தும், மாணவர்கள் அதன் மூலமாக கற்றுக் கொள்வதற்கு இருந்தும் அங்கே இருக்கக்கூடிய பிரின்ஸிபாலி

[a] Printed as Appendix III on page 237 infra.

[21st January 1961

னுடையவும் ஆசிரியர்களினுடையவும் தகராறுகள் காரணமாகத் தான் இந்தப் பாடம் கற்றுக் கொடுப்பது நிறுத்தப்பட்டது என்று சொல்லப்படுவது உண்மையா? இது விஷயமாக அரசாங்கத்திற்கு எழுதியிருந்ததின் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது கனம் அங்கத்தினர் அவர்களின் கற்பனையாகவோ அல்லது வேறு நபர்களின் கற்பனையாகவோ இருக்கலாம்.

*Water-supply to Jayankondan*

* 55 Q.—SRI S. LAZAR (on behalf of SRI K. R. VISWANATHAN :) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal under the Third Five-Year Plan to provide protected water-supply to Jayankondan town from Coleroon under the Comprehensive Water-supply Scheme;

(b) if so, the cost of the scheme; and

(c) the proportionate cost borne by the Panchayat Board, Jayankondan?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

(b) & (c) Do not arise.

SRI S. LAZAR : இந்த ஜெயங்கொண்டபுரத்திற்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்ற கோரிக்கை அரசாங்கத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்கு பல இடங்களிலிருந்தும் தண்ணீர் கொண்டுவரலாம் என்று சொல்லப்பட்டது. அப்படியானால் இங்கு தண்ணீர் கொண்டுவரும் திட்டத்தை தனியான ஒரு திட்டமாக அரசாங்கம் எடுத்துக் கொள்ளாததற்கு காரணம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : This will come under the urban water-supply scheme. By the end of the Second Plan 50 municipalities and 14 major panchayats will have protected water-supply. During the Third Plan period all the municipalities in the entire State, viz., 66 municipalities and 41 major panchayats will have protected water-supply. I find Jayankondan is not one of the places included. If the Panchayat comes forward with sound financial resources, then the matter will be looked into.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், ஜெயங்கொண்டான்புரம் பகுதிக்கும் உடையார்பாளையம் பகுதிக்கும் குடி தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருப்பதினால் அப்பகுதி மக்கள் பல வியாதிகளுக்கு ஆளாகின்றனர். சிலந்தி போன்ற வியாதிகள் அங்குள்ள மக்களுக்கு வருகின்றது. இதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் நேரிலேயே காட்டப்பட்டது. ஆகவே, அந்த இடங்களுக்கு கொள்ளிடத்தில் இருந்து லோயர் அணைக்கட்டு கீழ் புறம் மேல் புறத்திலிருந்து தண்ணீர் கொண்டு